

உ
சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத்திங்கள் இதழ்

மலர் 15 ] நவம்பர் 1999 [ இதழ் 5

பெருமைதரு ஆசிரியர், ''திருமுறைக்காவலர்''
கயிலைத் திரு. M. கண்ணப்ப செட்டியார் அவர்கள்
(நிருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)



முந்திச் சென்றுமுப் போதும் வணங்குமின்
அந்தி வாயொளி யான்றன் அண்ணாமலை
சிந்தி யாஎழு வார்வினை தீர்த்திடும்
கந்த மாமலர் சூடுங் கருத்தனே.

—திருநாவுக்கரசர்




1999
நவம்பர்
மலர் 15
இதழ் 5

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்
[illegible]

## ''அருள்தரு கை கொடுத்து ஏற்றும்''

இருள்தரு துன்பப்படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்
பொருள்தரு கண்ணிழந்(து) உண்பொருள் நாடிப் புகல்இழந்த
குருடரும் தம்மைப் பரவக் கொடுநர கக்குழிநின்(று)
அருள்தரு கைகொடுத்(து) ஏற்றும் ஐயாறன் அடித்தலமே.

—திருநாவுக்கரசர்

திருவையாற்றுப் பெருமானுடைய திருவடிகள் புத்திக்கு மயக்கத்தைத் தரும் துன்பத் திரை மறைப்பதினாலேயே மெய்ஞ்ஞானம் என்னும் உண்மைப் பொருளை அறிவிக்கும் அகக் கண்ணை இழந்து உலகத்திலே போக்கியமான பொய்ப் பொருள்களை விரும்பி சிறந்த புகலிடத்தைக் கைவிட்ட குருடர்களும், தம்மைத் துதித்த மாத்திரத்திலே அவர்களைக் கொடிய நரகத்தினின்று அருளாகிய கையைக் கொடுத்து கரை ஏற்றும்.

---

நமக்கு நன்மை எது என்பதைக் கடவுள் நன்கறிவார்.

—சாக்ரட்டீஸ்



# அன்பிற்குத் தலைசாய்த்த ஐயன்

(தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்)



''அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு''

[திருப்பனந்தாளில் எழுந்தருளி அருள்வழங்கும் இறைவன் ஒரு பெண்ணின் பேரன்பிற்குத் தலைசாய்த்து - ஒரு சீரடியாரின் உள்ளன்பிற்குத் தலைநிமிர்ந்த இனிய வரலாறுகளை விளக்கித் தொடங்கும் இக்கட்டுரை - திருவைந்தெழுத்தின் சிறப்பினையும் - திருக்கோயில்களிடத்து மக்களுக்கு உள்ள உரிமையினையும் பிறவற்றையும் இனிது விளக்கி நிறைவுபெறுகிறது.]

## அன்பிற்குக் குழைந்த ஐயன் :

இன்று ஒரு நல்லநாள். திருப்பனந்தாள் தேவஸ்தானத் தரிசனத்திற்குத் தருமை, துறைசை இரு மகாசந்நிதானங்களும் எழுந்தருளியுள்ளனர். தலவிருஷத்தின் பெயரால் விளங்கும் தலங்கள் பல. அவற்றுள் ஒன்று திருப்பனந்தாள். இங்குத் தலவிருஷம் பனை. ஊரின் திருப்பெயர் திருப்பனந்தாள். ஆனால் இங்குள்ள கோயிலின் பெயர் தாடகையீச்சரம் என்பது. தாடகை வழிபட்டதால் தாடகையீச்சரம் என வழங்கப்படுகிறது. இங்குத் தாடகையின் அன்புக்குப் பெருமான் தலைவளைந்தான். 1300 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த திருஞானசம்பந்தர் வழிபாட்டிற்கு வந்தபோது பாடிய தமது பாடலில் தாடகையீச்சரம் என்று இத்தலத்தைக் குறித்துள்ளார். இராமாயணத்தில் வரும் தாடகை வேறு. இங்குகூறப்படும் தாடகை வேறு. இவள் இத் தலத்தில் பெருமானுக்கு அன்போடும், ஆசாரத்தோடும் மலர்மாலை தொடுத்துக் கொடுக்கும் பணியை மேற்கொண்டிருந்தாள். மலர் எடுக்கும்போதும் மலர்மாலை தொடுக்கும்போதும் வாயைக் கட்டிக்கொண்டு வாய்பேசாது இருக்க வேண்டும் என்று புட்பவிதியில் கூறப்படுகிறது. அம்முறைமை தவறாது மலர்

---

நம்பிக்கை இல்லாத இடத்தில் முயற்சியும் இருக்கமுடியாது.
—ஜான்ஸன்

எடுத்துத்தொடுத்து அணிவித்து வழிபாடு செய்து வந்தாள் தாடகையென்னும்பெண். அவள் ஒருநாள் தனது வழிபாட்டின்போது பெருமானுக்கு மலர்மாலை அணிவிக்கையில் ஆடைநெகிழ்ந்தது. ஆடையைச் சரிசெய்து கொண்டு மாலை அணிவிக்கலாம் என்றால் ஆசாரம் குறைந்துவிடுமே என்று பரிதவித்தாள். ஆசாரம் குறையாமல் மாலை அணிவிக்க முயன்றாள்; தன் இரு முழங்கைகளினாலும் ஆடையை இடுக்கிக் கொண்டு மாலை அணிவித்தாள். பெருமான் தாடகையின் அன்புக்கு இரங்கித் தலைவளைந்து மாலையை ஏற்றுக் கொண்டார். உள்ளபடியே அன்புசெலுத்தி மலர்மாலை அணிவித்ததால் சுவாமி தலைசாய்த்தார்.

### மன்னன் முயற்சி :

சில பல ஆண்டுகள் கழித்து, அங்கு வழிபாட்டிற்கு வந்த சோழமன்னன், பெருமான் திருமேனி சாய்ந்திருப்பதைக் கண்டு வருந்தி, நேரே நிமிர்த்தி வழிபட எண்ணினான். தாடகையின் அன்புக்குத் தலைவளைந்த பெருமானை அன்பினால் நிமிர்க்க முயன்றான். அதனால் அவன் தன்னுடைய நால்வகைப் படைகளையும் பயன்படுத்தி இலிங்கத்தை நிமிர்க்க முயற்சி செய்தான்; நிமிர்க்க முடியவில்லை.

'செங்கண் வெள்ளேற்றின் பாகன் திருப்பனந்தாளில் மேவும்
அங்கணன் செம்மைகண்டு கும்பிட அரசன் ஆர்வம்
பொங்கித் தன்வேழமெல்லாம் பூட்டவும் நேர்நில்லாமைக்
கங்குலும் பகலும் நீராக் கவலையுற்றழுங்கிச் செல்ல'

என்பது சேக்கிழார் வாக்கு. பெருமான் அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை; சோழனும் அன்போடுதான் நிமிர்க்க முயன்றான். ஆனால், அந்த அன்பு தாடகை அன்பின் அளவிற்கு இல்லை.

### குங்கிலியக்கலயரின் குறைவிலா அன்பு :

திருக்கடவூரில் குங்கிலியத் தொண்டு செய்து வந்தார் குங்கிலியக்கலய நாயனார். அவர் சோழ மன்னனின் செயலை அறிந்தார். சோழ மன்னன் ஈடுபட்ட பணியில் தாமும் ஈடுபட விரும்பினார். திருப்பனந்தாள் சென்று,

''தேனலர்க்கொன்றையார்தந் திருமேனி
பூங்கச்சேய்ந்த
மானவன் கயிறுபூண்டு கழுத்தினால்
வருந்தலுற்றார்.''

---

மரியாதையாகப் பேசுவதும், நடப்பதும் செலவில்லாத செல்வங்கள்.
—ஸெர்வாண்டீஸ்

இலிங்கத்தில் சுற்றியிருந்த கச்சில் முடியிட்ட கயிற்றின் மற்றொரு முனையைத் தம் கழுத்தில் சுருக்கிட்டு இழுத்தார். அன்புக்கிரங்கும் அண்ணலும் நேர்நின்றார். ஆழமான அன்புக்கு - பக்திக்குக் கட்டுப் படுபவன் ஆண்டவன் என்பதை இவ்வரலாறு விளக்குகிறது.

திருக்கயிலாய மரபு :

சிந்தை இடையறா அன்பும் திருமேனிதனில் அசைவும் திகழ விற்றிருக்கிறார்கள் துறைசையாதீன மகாசந்நிதானம் அவர்கள். அம்பலவாணர் என்ற பெயர் தாங்கியுள்ளார்கள் அவர்கள். அம்பலவாணர் பஞ்சாக்கரமே வடிவானவர். பஞ்சாக்கர தேசிகர் தான் திருவாவடுதுறை ஆதீனத்தை ஸ்தாபித்தவர்கள். (குரு) ஞானசம்பந்தர் தருமையாதீனத்தை ஸ்தாபித்தவர். ஞானசம்பந்தர் பெயரும் பஞ்சாக்ஷரம். இது பக்த பஞ்சாக்ஷரம் ஒற்று நீக்கி எண்ணினால் பஞ்சாக்ஷரம்தான். பஞ்சாக்ஷரத்தை ஓதினால் நலம் அடையலாம். பெருமிழலைக்குறும்பர் சுந்தரமூர்த்தி நாயனார் பெயரை ஓதி நலம்பெற்றார். அப்பூதி அடிகள் திருநாவுக்கரசரின் பெயரைச் செபித்து நலம் பெற்றார்.

'மீனவன் செவியினூடு மெய்யுணர் வளிப்போர்கூற
ஞானசம்பந்தர் என்னும் நாமமந்திரமும் செல்ல'

என்று சேக்கிழார் குறிப்பிடுவார். ஞானசம்பந்தரை அழைத்தல் நலம் என்று மங்கையர்க்கரசியார் பாண்டிய மன்னனுக்கு அறிவித்தவுடன் அரசனின் உடல் வெப்பு சிறிது குறைந்தது. இதுவும் பக்த பஞ்சாக்ஷரத்தின் மகிமை. பஞ்சாக்ஷரம் முக்கியமானது. பஞ்சாக்ஷரத்தை உபதேசம் செய்யும் மரபில் திருக்கயிலாய பரம்பரையில் வந்தவர்கள் இரு மகாசந்நிதானங்களும். அவர்களிடம் பஞ்சாக்ஷரத்தை உபதேசவாயிலாகக் கேட்டு மக்கள் உய்தி பெறுவார்களாக.

''சூழ்தரு வல்வினையும் உடல்தோன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேல்மிக ஏத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் அனல்பொங்கரவும் புனைந்த
தாழ்சடையான் பனந்தாள் திருத்தாடகை யீச்சரமே''

— நன்றி **'திருவருட் செய்தி'**

---

மனிதன் செய்யக்கூடிய உயர்ந்த அறம் மன்னிப்பதுஒன்றே
— ஸ்டெர்ன்

## தலவரலாறு

# மேலைத்திருக்காட்டுப்பள்ளி

சோழநாட்டு (தென்கரை)த் தலம்.

மக்கள் வழக்கில் திருக்காட்டுப்பள்ளி என்று வழங்குகிறது. திருக்காட்டுப்பள்ளி என்னும் பெயருடைய இரு தலங்கள் உள்ளன. காவிரியின் வடகரையில் உள்ளது கீழைத் திருக்காட்டுப்பள்ளி எனப் படும். அது திருவெண்காட்டிற்கு அருகில் உள்ளது.

இத்தலம் தென்கரையில் உள்ளது. மேலைத் திருக்காட்டுப்பள்ளி எனப்படும். இங்குதான் குடமுருட்டியாறு பிரிகின்றது.

திருச்சி, தஞ்சையிலிருந்தும், திருக்கண்டியூர் திருவையாறு கல்லணை முதலிய இடங்களிலிருந்தும் இத்தலத்திற்குப் பேருந்துகள் உள்ளன. திருவையாறு-கல்லணை சாலையில் திருக்காட்டுப்பள்ளி உள்ளது.

இறைவனை திருமால், பிரமன், சூரியன், பகீரதன், உறையூர் அரசி ஆகியோர் வழிபட்ட தலம். அக்கினி வழிபட்ட தலமாதலின் கோயிலுக்கு 'அக்னீஸ்வரம்' என்பது பெயர்.

இறைவன்—அக்னீஸ்வரர், தீயாடியப்பர்
இறைவி —சௌந்தரநாயகி, அழகம்மை
தலமரம் —வன்னி, வில்வம் இரண்டும் உள்ளன.
தீர்த்தம் —அக்கினி தீர்த்தம், காவிரி. [அக்கினி தீர்த்தம் கிணறுவடிவில் உள்ளது.] இத் தீர்த்தத்தில் கார்த்திகை ஞாயிறு, மாசிமகம், பங்குனிஉத்திரம் வைகாசி விசாகம் முதலிய நாள்களில் நீரா்டி வழிபடுதல் சிறப்பென்பர்.

சம்பந்தர், அப்பர் ஆகியோர் பாடல் பெற்ற தலம்.

இத்தலம் பற்றிச் சொல்லப்படும் ஒரு செய்தி:-

உறையூரிலிருந்து ஆண்டு வந்த மன்னன், உறையூர் நந்த வனத்தில் இறைவனுக்குரியதாகப் பூத்து வந்த செவ்வந்தி மலர் களைப் பணியாளன் பறித்து வந்து தர அவற்றைப் பெற்றுத் தன் இரு மனைவியருக்கும் தந்தான். மூத்த மனைவி அம்மலர்களைத் தான்

---

கடவுளிடம் பக்தி செய்தாலன்றி, பணத்திலிருந்து ஆசையை அகற்றமுடியாது. —குருநானக்

சூடிக் கொள்ளாமல் சிவபெருமானுக்கு அணிவித்துவந்தாள் இளைய மனைவி தான் சூடி மகிழ்ந்தாள். இதனால் இளையவள் இருந்த உறையூர் மண் மாரியால் அழிந்தது. மூத்தவள் இருந்த திருக்காட்டுப் பள்ளி மட்டும் அழியாமல் பிழைத்தது என்று சொல்லப்படுகின்றது.

ஐந்து நிலைகளுடன் கூடிப் பொலிவுடன் ராஜகோபுரம்உள்ளது. செப்புக் கவசமிட்ட கொடிமரம் உள்ளது. வலமாகச் சென்றால் விநாயகர் சந்நிதி உள்ளது. உட்சென்று வலப்பால் அம்பாள் சந்நிதி உள்ளது – தெற்கு நோக்கியது - நின்ற திருக்கோலம். சந்நிதி வாயிலில் சுதையாலான துவாரபாலகிகள் உளர்.

உள் கோபுரம் மூன்று நிலைகளுடன் உள்ளது. உட்சென்றால் வலப்பால் நடராசசபை உள்ளது. உற்சவத் திருமேனிகள் பாது காத்து வைக்கப்பட்டுள்ளன. நவக்கிரக சந்நிதியில், எல்லாக் கிரகங் களும் சூரியனைப் பார்த்தவாறே அமைந்துள்ளன.

மூலவர்-சிவலிங்கத்திருமேனி. நான்கு படிகள் பூமியில் தாழ உள்ளார். வெள்ளிக் கவச அலங்காரம், உள்ளத்திற்கு ஓர் அலாதி யான மனநிறைவு, படிகள் இறங்கிச் சுற்றி வலம் வரலாம். சோழ மன்னன் பிரதிஷ்டை. மூலவரைச் சுற்றி வரும்பிராகாரத்தில் கோஷ்ட மூர்த்தமாக யோக தட்சிணாமூர்த்தி விளங்குகின்றார்.

உள் பிராகாரத்தில் விநாயகர் உள்ளார். இலிங்கோற்பவர் கோஷ்ட மூர்த்தமாக இருக்காமல், விநாயகருக்கு பக்கத்தில் சந்நிதி யாகவுள்ளது. இலிங்கோற்பவரிடத்தில் அர்த்தநாரீஸ்வரர் உள்ளார். அடுத்து வள்ளி தெய்வயானை சமேத ஆறுமுகப்பெருமானுள்ளார். பக்கத்தில் காசி விசுவநாதர் விசாலாட்சி, கஜலட்சுமி, துர்க்கை சந்நிதிகள் உள.

முன் மண்டபத்தில் வலப்பால் பைரவர், நால்வர் திருமேனிகள் உள்ளன. நித்திய வழிபாடுகள் முறையாக நடைபெறுகின்றன. மாசி மகமும் பங்குனிப் பெருவிழாவும் இங்குச் சிறப்புடையன.

1983ல் கும்பாபிஷேகம் நடைபெற்றுள்ளது. முதல் ஆதித்திய சோழனின் காலத்திருப்பணியைப் பெற்ற கோயில். 'பள்ளி' என்ற சொல்லைக் கொண்டு இவ்வூரில் ஒரு காலத்தில் சமணர்கள் வாழ்ந் திருக்கலாம் என்று கருதுகின்றனர். அதற்கேற்ப 24ஆவது தீர்த் தங்கரரின் சிலை இத்தலத்தில் கிடைத்துள்ளதாம்.

---

பாவங்களுக்கெல்லாம் அடிப்படை கடவுள் நம்பிக்கை யின்மை.

—பால்சாக்

# பதிகப் பெருவழி—72

## மேலைத்திருக்காட்டுப்பள்ளி

### திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

திருச்சிற்றம்பலம்

வாருமன் னும்முலை மங்கையோர் பங்கினன்
ஊருமன் னும்பலி உண்பதும் வெண்தலை
காருமன் னும்பொழில் சூழ்ந்தகாட்டுப் பள்ளி
நீருமன் னுஞ்சடை நிமலர்தம் நீர்மையே. 1

உமாதேவியாரை ஒரு பாகத்தில் கொண்டு விளங்கும் ஈசன், ஊர்தோறும் சென்று பிரம கபாலம் ஏந்திப் பிச்சை கொள்பவர். அப் பெருமான், மேகம் சூழ்ந்த பொழில் மன்னும் காட்டுப்பள்ளியில், கங்கை தரித்த சடை முடியுடைய நிமலராய் விளங்கி இருப்பது அவர் தம் அன்பின் தன்மையே ஆகும்.

நிருத்தனார் நீள்சடை மதியொடு பாம்பணி
கருத்தனார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
அருத்தனார் அழகமர் மங்கையோர் பாகமாப்
பொருத்தனார் கழலிணை போற்றுதல் பொருளதே. 2

ஈசன், நடனம் புரிபவர்; நீண்ட சடை முடியின் மீது சந்திர னோடு பாம்பும் சேர்த்து அணியும் கருத்தினை உடையவர்; நறுமணம் கமழும் பொழில் சூழ்ந்த காட்டுப்பள்ளியின்கண், எப்பொருட்கும் விளக்கமாய் மேவும் மேலான பொன் போன்றவராய்த் திகழ்பவர்; உமாதேவியாரைத் திருமேனியில் பாகம் கொண்டு மேவுபவர்; அத் தகைய பரமனின் திருவடி மலரை வணங்கிப் போற்றுதல் ஒன்றே பயன்தர வல்லதாகும்.

பண்ணினார் அருமறை பாடினார் நெற்றியோர்
கண்ணினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
விண்ணினார் விரிபுனல் மேவினார் சடைமுடி
அண்ணலார் எம்மையாள் உடையஎம் அடிகளே. 3

---

மனித வாழ்வின் தலைசிறந்த லட்சியம் உண்மையைத் தேட ஆசை கொள்வதே. —பாகவதம்

ஈசன், வேதங்களை உரிய பண்ணில் விரித்து ஓதியவர்; நெற்றியில் கண் உடையவர்; பொழில் சூழ்ந்த காட்டுப்பள்ளியில் கங்கையைத் தரித்து விளங்கும் சடை முடியுடையவராய் வீற்றிருப்பவர். அவர் எம்மை ஆளாகக் கொண்டு மேவும் அண்ணல்.

பணம்கொள்நா கம்அரைக்கு ஆர்ப்பது பல்பலி
உணங்கலோடு உண்கலன் உறைவது நாட்டிடைக்
கணங்கள் கூடித்தொழுது ஏத்துகாட் டுப்பள்ளி
நிணங்கொள் சூலப்படை நிமலர்தம் நீர்மையே. 4

ஈசன், படம் கொண்டு ஆடும் நாகத்தை அரையில் ஆர்த்துக் கட்டிப் பிரம கபாலத்தைக் கரத்தில் ஏந்திப் பலி ஏற்று விளங்குபவர் அப்பெருமான் உறைவது, சிவகணத்தோர் தொழுது ஏத்தும் காட்டுப் பள்ளியாகும். அப்பதியில், ஈசன், சூலப்படையைத் திருக்கரத்தில் ஏந்திய நிமலராய் விளங்கும் இயல்புடையவர்.

வரையுலாம் சந்தொடு வந்திழி காவிரிக்
கரையுலாம் இடுமணல் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
திரையுலாம் கங்கையும் திங்களும் சூடியங்கு
அரையுலாம் கோவணத்து அடிகள் வேடங்களே. 5

மலையில் திகழும் சந்தன மரங்களை, நீரின் வாயிலாகஉந்தித் தள்ளிக் கரையினில் சேர்க்கும் காவிரி மணல் சூழ்ந்த காட்டுப்பள்ளியில், ஈசன் கங்கையும் சந்திரனும் சடைமுடியில் சூடி, அரையில் கோவண ஆடையுடன் காட்சி தருபவர்.

வேதனார் வெண்மழு வேந்தினார் அரங்குமுன்
ஓதினார் உமையொரு கூறனார் ஒண்குழைக்
காதினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நாதனார் திருவடி நாளும்நின்று ஏத்துமே. 6

---

கடவுள் படைப்பில் நேர்மையான மனிதனே தலைசிறந்தவன்
—போப்பாண்டவர்

வேதங்களின் நாதராகிய ஈசன், மழுப்படையை ஏந்தியவராய் உமாதேவியை ஒரு கூறு உடையவராய், குழை அணிந்த காதினராய் கடிமணம் கமழும் பொழில் சூழ்ந்த காட்டுப்பள்ளியின் தலைவராய் விளங்குபவர். அப் பெருமானின் திருவடியை நாளும் நின்று ஏத்து விராக.

மையினார் மிடறனார் மான்மழு வேந்திய
கையினார் கடிபொழில் சூழ்ந்தகாட்டுப்பள்ளித்
தையலோர் பாகமாத் தண்மதிசூடிய
ஐயனார் அடிதொழ அல்லல்ஒன்று இல்லையே. 7

மைபோன்ற கரிய கண்டத்தை உடைய ஈசன், மானையும் மழுவையும் ஏந்திய கையினர். அவர் கடிமணம் பரவும் பொழில் சூழ்ந்த காட்டுப்பள்ளியில் உமாதேவியாரைத் திருமேனியில் பாகம் கொண்டு குளிர்ந்த சந்திரனைச் சூடியவராய் வீற்றிருப்பவர். அத்தலைவரின் அருள் வழங்கும் திருவடியைத் தொழுது போற்ற அல்லல் யாவும் நீங்கும்.

சிலைதனால் முப்புரம் செற்றவன் சீரினார்
மலைதனால் வல்லரக் கன்வலி வாட்டினான்
கலைதனார் புறவணி மல்கு காட்டுப்பள்ளி
தலைதனால் வணங்கிடத் தவமது ஆகுமே. 8

மேரு மலையை வில்லாகக் கொண்டு முப்புரத்தினை எரிந்து சாம்பலாகுமாறு செய்த ஈசன், சீர் மிகுந்த கயிலை மலையினால் இராவணனுடைய வலிமையை அடக்கியவர். அப்பெருமான், மான்கள் விளங்கும் சோலைகளைக் கொண்டு மேவும் காட்டுப்பள்ளியைச் சிரத்தையாய் வணங்க, நற்றவத்தின் பேறு கைவரப் பெறும்.

செங்கண்மால் திகழ்தரு மலருறை திசைமுகன்
தங்கையால் தொழுதெழத் தழலுரு ஆயினான்
கங்கையார் சடையினான் கருது காட்டுப்பள்ளி
அங்கையால் தொழும்அவர்க்கு அல்லல்ஒன்று
இல்லையே. 9

---

வாக்குறுதி கொடுப்பவன் அதற்குக் கடனாளி.

—தலாமுத்

திருமாலும், பிரமனும் தொழுது போற்ற அழல் உருவம் ஆகிய கங்கையைச் சடையில் தரித்த சிவபெருமான் கருதுகின்ற காட்டுப் பள்ளியை அழகிய கைகளால் கூப்பித் தொழும் அன்பர்களுக்கு, அல்லல் இல்லை.

போதியார் பிண்டியர் என்றஅப் பொய்யர்கள்
வாதினால் உரையவை மெய்யல வைகலும்
காரினார் கடிபொழில் சூழ்ந்தகாட்டுப் பள்ளி
ஏரினால் தொழுதெழ இன்பம்வந்து எய்துமே. 10

அரச மரத்தினடியில் ஞானம் பெற்ற புத்தரின் வழி வந்தவர் எனப் பகரப்படுபவரும், அசோக மரத்தின் நிழலில் அமரும் அருகக் கடவுளின் நெறியுளோர் எனப் பகரப்படுபவரும் கூறும் சொற்கள் வாதத்தால் உரைக்கப் பெற்றவை. அவை மெய்ம்மை ஆகாது. காட்டுப்பள்ளியினை நாள்தோறும் ஏத்தித் தொழுதுபோற்ற இன்பம் வந்து சேரும்.

பொருபுனல் புடையணி புறவநன் னகர்மன்னன்
அருமறை யவைவல்ல அணிகொள்சம் பந்தன்சொல்
கருமணி மிடற்றினன் கருதுகாட்டுப் பள்ளி
பரவிய தமிழ் சொல்லப் பறையுமெய்ப் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

நீர் வளம் பெருக அணி பெறும் புறவம் என்னும் பெயர் கொண்ட சீகாழிப் பதியில், சிறப்புடன் விளங்கும், அருமையாகப் போற்றப்பெறும் மறைகளில் வல்ல அணி திகழ ஓங்கும் ஞான சம்பந்தன், நீல கண்டனாகிய ஈசன் கருதும் காட்டுப்பள்ளியைப் பரவிப் போற்றிய இத்திருப்பதிகத்தை ஓத வல்லவர்கள், பாவம் தீரப் பெறுவார்கள்.

---

உண்மையை மறுத்தலொன்றே நாத்திகமாவது.

—ஆர்தர் விஞ்ச்

## திருக்கடவூரில் கார்த்திகை சோமவார சங்காபிஷேகம்

-போட்டோ என். ராமகிருஷ்ணா மயிலாடுதுறை.

தேவர்களும், அசுரர்களும் சாகா மருந்தாகிய அமிர்தத்தை விரும்பிக் கடலைக் கடைந்து அமிர்தம் பெற்றனர். அவ்வமிர்தத்தை ஒரு கடத்தில் அடைத்து எடுத்துவரும் வழியில் உள்ள இத்தலத்தில் அக்கடத்தினை வைத்துவிட்டு நீராடச் சென்றனர். நீராடி மீண்ட தேவர்கள் கடத்தினை எடுக்க முயன்றனர். அது பாதாளம் வரை ஊடுருவிச் சென்று சுயம்பு மூர்த்தியாக அமிர்தலிங்கமாகக் காட்சியளித்தது. அமிர்தகடம் சிவலிங்கமாக ஆனதால் இறைவனுக்கு அமிர்த கடேசுவரர் என்றும், தலத்திற்கு கடவூர் என்றும் பெயர் வந்தது. சிவ பெருமான் காலனை காலாற் கடிந்து சிவனடியார்களுக்கும் காலத்தைக் கடந்தவர்கள் என்பதை செயற்படுத்திக் காட்டிய இடமாதலின் கடவூர் எனப் பெயர் பெற்று விளங்கிற்று என்றும் கூறுவர். திருக்கடையூர் என்றும் மருவி வழங்குகின்றது.

பிரம்மன் ஞானோபதேசம் பெற விரும்பி தவம்புரிந்தான். தவத்திற்கு இரங்கிய இறைவன் வில்வவிதையினை பிரம்மனிடம் கொடுத்து இவ்விதை எத்தலத்தில் ஒரு முகூர்த்தக் காலத்தில் முளைக்கிறதோ, அத்தலமே உனக்கு ஞானோபதேசம் கிடைக்கும் இடம் என்று அருளிச் செய்தார். பிரம்மனும் அவ்வாறே பல இடங்களில் இட்டுப் பார்த்தான். முளைக்கவில்லை. இத்தலத்தில் இட்டதும் குறித்த காலத்தில் முளைத்தது. பிரம்மனும் இறைவனை வழிபட்டு ஞானோபதேசம் பெற்றான். இதனால் வில்வ வனம் எனப் பெயர்பெற்றது. வில்வ மரம் தலவிருட்சமாக விளங்குகின்றது. பிரமன் பூஜித்த லிங்கம் வில்வவனேஸ்வரர் என்ற பெயரோடு மேற்கு நோக்கிய சன்னிதியாக சுவாமி கோயில் வடக்குப் பிரகாரத்தில் பிக்ஷாடணமூர்த்தி சபைக்கு கீழ்ப்பால் அமைந்துள்ளது. மார்க்கண்டேயர் வரவழைத்த கங்கையில் 'சாதி முல்லைக்கு' கொடியும் வந்தமையால் அதுவும் இங்கு தல விருட்சமாக இருக்கிறது.

மிருகண்டு முனிவர் பிள்ளைப்பேறு கருதி தவம் புரிந்தார். தவத்திற்கு இரங்கிய இறைவனும் காட்சியளித்து நல் அறிவும், அழ

---

கர்வம் உடையவர்களைக் கண்டு வெற்றி விலகிவிடுகிறது.

—டெனிக்லான்

கும், பக்தியும் உள்ள பிள்ளை வேண்டுமானால் 16 வயது வரை தான் உயிர் வாழும். நல்லறிவு, அழகும், பக்தியும் இல்லாத பிள்ளை வேண்டுமானால் 100 வயது வாழும். இவற்றுள் எது தேவை என்று வினவினார். முனிவர் 16 வயதுடைய பிள்ளைதான் தேவைஎன்றார். அவ்வாறே மகனையும் பெற்றார். மார்க்கண்டேயர் என்ற பெயருடன் வளர்ந்தான். அவனுக்கு 16 வயது நெருங்கியது. அது கண்டு பெற்றோர் மனம் வருந்தினர். காரணம் அறிந்த மார்க்கண்டேயர் தலங்கள் தோறும் சென்று சிவபெருமானை பூஜித்து வழிபட்டார். கடைசியாக திருக்கடவூர் வந்து அமிர்தகடேசரை வழிபட்டு இறவா வரமும் பெற்றார். இதை அறியாத எமன் மார்க்கண்டேயர்உயிரைக் கொண்டு வருமாறு தூதர்களையும், அமைச்சனாகிய காலனையும் அனுப்பினான். அவர்கள் வராததால் தானே எருமைக்கடாவாகனத்தில்சென்று மார்க்கண்டேயர் மீது பாசக்கயிறு விசினான். அமிர்தகடேசர் சிவலிங்கத்தில் இருந்து 'சம்ஹார மூர்த்தி'யாகத் தோன்றி எமனை சங்கரித்தார் என்றும் பதினாறு வயதுடனே சிரஞ்சீவியாக இருக்குமாறு மார்க்கண்டேயருக்கு அருள்புரிந்தார் என்பதும் புராணம்.

தேவர்கள் வேண்டுகோளின்படி எமனையும் உயிர் பெற்று எழுமாறு அருள்புரிந்தார். எமன் அருள் பெற்ற நிலையில் சம்ஹார மூர்த்திக்கு எதிரில் தனது வாகனத்தை பக்கத்தில் நிறுத்திஅஞ்சலித்து கூப்பிய கையனாய் நிற்பதை இன்றும் காணலாம்.

சிங்காரக் கடவுள் சுவாமி கோயில் மகா மண்டபத்தில் வடபால் சிற்ப வேலைப்பாடமைந்த சபையில் எமனை நிக்ரஹ அனுக்ரகம் செய்த கோலத்தில் தெற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். வலது திருக்கரங்களில் சூலமும், மழுவும், இடது திருக்கரங்களில் பாசமும், தர்சனி முத்திரையும் உடையவராய் உத்தேசமாக நடராஜர் திருவுருவைப் போல் காட்சியளிக்கின்றார். இவரது இடது திருவடியால்உதையுண்ட எமன் தலைகீழாக விழுந்து கிடக்கின்றான். வலப்பக்கத்தில் மார்க்கண்டேயர் நின்று கொண்டிருக்கிறார். சன்னதியில் பிணம் கிடத்தல் தகாது என்று சிவபூதம் ஒன்று எமன் காலில் கயிறு கட்டி இழுக்கின்றது. அடியார்களிடம் சென்றால் இக்கதிதான் நேரும் என்று தன் பக்கத்தில் உள்ள பாலாம்பிகை அம்மையை தர்சனி முத்திரையால் சாட்சியாக காட்டுகின்றார். இவர் ஆண்டிற்கு பதினொரு முறைதான் அபிஷேகம் கொள்வார். சித்திரைப் பெருவிழாவில் ஆறாம் திருநாள்

---

இதயத்தில் அமைதி உண்டாவதே இன்பம். இதய நிறைவு இல்லாமையே துன்பம்.

—லாவோட்ஸே

மட்டும்தான் வீதியுலாவிற்கு எழுந்தருளுவார். இன்றும் ஆயுள் பெருக்கத்தை விரும்புவோர் இத்தலத்து இறைவனை வழிபட்டு வரம் பெறுகின்றனர். இங்கு நவக்கிரகங்கள் இல்லை. கிரக பூஜை செய்வோர் கால சம்ஹார மூர்த்திக்கே பூஜை செய்து பயன்பெறுகின்றனர். சஷ்டியப்த பூர்த்தியை பலர் இங்கு வந்து செய்து சிறப்புறுகின்றனர்

இத்தலம் அட்ட வீரட்டங்களில் ஒன்று. இங்கு அமிர்தகடேசுவர மூர்த்திக்கு மேற்கு நோக்கிய சன்னிதானம். இவரது திருமேனியில் எமன் வீசிய பாசக்கயிற்றின் தழும்பும், எமனை உதைக்கும் பொருட்டு கால்காலனாய் தோன்றியதால் லிங்கத்தின் உச்சியில் லேசான பிளப்பும் காணப்படுகிறது. தேவர்கள் கொண்டு வந்து வைத்த அமிர்தம் லிங்கமாக ஆனதால் அவர்கள் இறைவனை வேண்டி ஞானவாயில் அமிர்தம் பெற்றனர். பிள்ளையார் நாமம் கள்ளவாரண பிள்ளையார். இவர் அமிர்தத்தை மறைத்து வைத்தார். சுவாமி சன்னிதி பக்கலில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

சுவாமி சன்னதிக்கு இடப்பக்கம் நாலாம்பிரகாரத்தில் நல்லன எல்லாம் தரும் 'அபிராமி அம்மை' எழுந்தருளியுள்ளார். இவ்வம்மையின் மீது அபிராமி பட்டர் என்பவரால் பாடப்பட்ட அபிராமி அந்தாதி என்ற நூல் அருள்நூலாகும். இதைப்பாராயணம்செய்து அம்மனின் அருளைப் பெறுவோர் பலராவார். பிரம்மாவும், சரஸ்வதியும் அபிராமிஅம்மையை வழிபட்டு அருள் பெற்றார்கள். அபிராமியின் உருவம் அம்மையார் கோயில் மேற்கு பிரகாரத்தில் உள்ளது.

கோயில் ஆறு பிரகாரங்களை உடையது. முன்கோபுரம் பிரமாண்டமானது, பல தீர்த்தங்கள் உள்ளன. அமிர்தபுஷ்கரணி சிறப்பானது. மார்க்கண்டேயர் தீர்த்தம் கங்கா தீர்த்தம் என்று அழைக்கப்படுகிறது. இது திருக்கடவூர் மயானம் என்ற தலத்தில் உள்ளது. இத்தீர்த்தம் தான் தினமும் அமிர்தகடேசருக்கு அபிஷேகிக்கப்படுகின்றது. இக்கோயிலில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. சோழர்களின்வரலாறும், பாண்டியர்களின் கொண்டைத் தன்மையும் இவைகளால்விளங்குகின்றன.

## சோமவார விரதம் :

கார்த்திகை மாதத்தில் சிவபெருமான் ஒளிப்பிழம்பாக காட்சியளித்தார். எனவே கார்த்திகை மாதம் சிறப்பானது. சிவபெருமானுக்கு அபிஷேகப்பிரியர் என்ற பெயரும் உண்டு. எனவே சோமவாரத்தில் அவருக்கு சிறப்பான அபிஷேகம் செய்யப்படுகின்றது.

---

கோபத்துடன் எழுகிறவன் நஷ்டத்தோடு உட்காருகிறான்.

—அரேபியா

அபிஷேகங்களில் சிறந்தது 'சங்காபிஷேகம்' சங்குகளில் வலம் புரி சங்கு, இடம்புரி சங்கு, சலஞ்சலம், பாஞ்சசன்யம் முதலிய வகைகள் உண்டு. ஒன்றுக்கொன்று ஆயிரம் மடங்கு சிறப்புடையனவாம். திருக்கடவூரில் ஒவ்வொரு ஆண்டு கார்த்திகை சோமவாரத்தில் வலம் புரி சங்கினை பிரதானமாகக் கொண்ட 1008சங்குகளைப் பரப்பி அவற்றில் மார்க்கண்டேய கங்கா தீர்த்தத்தினை நிரப்பி மற்றும் 300 சரக்குகள் சேர்த்து ஆகம விதிப்படி பூஜித்து அமிர்தகடேசருக்கு அபிஷேகம் செய்யப்பெறும். மாலையில் நல்ல கூட்டம் இருக்கும். இந்த தீர்த்தத்தைப் பெறுவோர் எல்லா வகையான நோய்களினின்றும் விடுபட்டு நன்மை அடைவர்.

இக்கோயில் தருமை ஆதீனத்தைச் சேர்ந்தது. ஸ்ரீலஸ்ரீ மகா சன்னிதானம் அவர்களின் திருவுளப்படி 1008சங்காபிஷேகதீர்த்தத்தை சென்னை வாசிகளுக்கு மறுநாள் பிரசார நிலையத்தில் வழங்கப்படுகிறது.

திருக்கடவூர் சங்காபிஷேகம் மாலை 6-00 மணிக்கு நடைபெறும். அன்று இரவு பஞ்சமூர்த்திகளும் எழுந்தருளி திருவீதி உலா காட்சி வழங்குவர்.

இக்கோயில் சிறப்பாக திருப்பணி செய்யப்பட்டு 1957ல் கும்பாபிஷேகம் நடைபெற்றது.

ஈவதற்கு அறிய மங்கல நூல் தாலியையும் விற்று குங்கிலிய தூபம் இட்டு, அதனால் குங்கிலிய நாயனார் என்ற நாயனார் வாழ்ந்த இடம் திருக்கடவூர், மற்றும் காரி நாயனார், தேவநாயனார் முதலியோர் வாழ்ந்த இடம். திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இங்கு இறைவனை வழிபட்டு பதிகம் பாடியுள்ளார்கள். சுந்தரர் பதிகம் ஒன்றும் இத்தலத்திற்கு உண்டு.

திருக்கடவூர் மாயூரம் தரங்கம்பாடி சாலையில் பதினோறாவது மைலில் உள்ளது. பஸ் வசதி உண்டு. கார்த்திகை மாதம் ஒவ்வொரு சோம வாரமும் சங்காபிஷேகம் நடைபெறும். திருக்கடவூர் கோயில் சிறப்பாக திருப்பணி செய்யப்பட்டுள்ளது.

---

லாபம் அல்லது பேராசையிலிருந்து கோபம் பிறக்கிறது.

—மகாபாரதம்

# தமிழ் அருச்சனை

முதுபெரும்புலவர், சித்நாந்தக் கலைமணி, திருமுறை உரைமணி.
திருநெறித் தமிழ்ச்சுடர், மகாவித்துவான், முனைவர்
உயர்திரு. சி. அருணைவடிவேலு முதலியார், அவர்கள்

சென்ற மாத தொடர்ச்சி....

மேலும் எவ்விடத்திலும் இயல்பாகத் தோன்றி வழங்கும் மொழியைத்தான் அறிஞர்கள் செப்பனிட முடியுமேயன்றி அறவே இல்லாத ஒரு மொழியை எழுத்து வகையிலும், சொல்வகையிலும் யாரும் உண்டாக்கி விடமுடியாது. அதனால் 'ஆரியம் கடவுள் வழி பாட்டிற்கென்றே அமைக்கப்பட்டது' எனச்சொல்லி உலக வழக்கிலும் வழிபாட்டு முறையிலும் உள்ள மொழிகளை வழிபாட்டு முறையி னின்றும் நீக்கிவிட நினைப்பது நேர்மையாகாது.

இனி, இன்று திருக்கோயில்களில் தமிழ்த் திருமுறைகளை, திராவிட வேத தோத்திரம் என வழிபாட்டில் ஓதுதல் நடைபெற்று வருகின்றது. அங்ஙனமாக, தமிழிற்கு இடமே கொடுக்கப்படாதது போல் வைத்து தமிழில் அருச்சனை செய்தல் வேண்டும் என வீண் கிளர்ச்சி செய்தல், ஏன்? எனச் சிலர் எதிர்ப்புக் கூறலாம். அது தமிழ் அருச்சனைக் கோரிக்கைக்குத் தீர்வாகாது. ஏனெனில், திருக்கோயில் களில் ஆறு காலம்—என்ற முறையில் காலந்தோறும் தொடங்கி முறையாக அருச்சகரால் செய்துமுடிக்கப்படும் வழிபாடு உலக நலம் கருதி அனைவர்க்கும் பொதுவாக செய்யப்படும் பரார்த்த பூசையாம்.

திருக்கோயில்களில் ஏதேனும் ஒரு காலத்திற் சென்று பரார்த்த பூசை முடிந்தபின் தனியார் பலர் தங்கள் நலம் கருதியும், தங்கள் குடும்ப நலம் கருதியும் செய்யும் அருச்சனை ஆன்மார்த்தமானது, தமிழில் செய்ய விரும்புவோருக்கு திராவிட வேத தோத்திரம் நடத்தப் படுவதைச் சொல்லித் தவிர்த்து விடமுடியாது.

தமிழில் அருச்சனை செய்யப்பட வேண்டியதன் இன்றியமை யாமை இது காறும் இனிது விளக்கப்பட்டது.

ஆகவே, அதற்கு மாறாகச் சொல்லப்படுவன யாவும் வெறும் கண்துடைப்புப் பேச்சாகவே அமையும். உலகனைத்திற்கும் பொது

---

**செயலைக் கடினமாக்குவது சோம்பேறித்தனம். அதைச் சுலபமாக்குவது உழைப்பு.** —பிராங்ளின்

இடமான கோயில்களில் தங்கள் தனி நலச் செய்தியை வலியுறுத்திக் கேட்க அனைத்து மக்களுக்கும் தனியுரிமை உண்டு.

''கோயில்களில் வடமொழியருச்சனை பழைய நடைமுறை; அதை மாற்றுதல் கூடாது'' எனச் சிலர் வாதிடலாம் ''எத்தனைப் பழைய நடைமுறைகளைக் காலநிலைமையை நோக்கி நாம் மாற்றிக் கொண்டோம்'' என்பதை அவர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

''பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே''

என்பது தமிழ் இலக்கணச் சூத்திரம். (நன்னூல்)

''கோயில்களில் சில இனத்தவர் நுழையவே கூடாது'' என்பது எவ்வளவோ காலம் இந்திய நாட்டில் நடைமுறையில் இருந்தது. அந்த இனவேற்றுமை செயலை இன்று நாம் அகற்றி, அனைவர்க்கும் சமஉரிமையைக் கொடுத்துள்ளோம்.

பெண் கொடுத்தல் வாங்கல்களிலும் இனவேற்றுமைவலுவாகக் கடைபிடிக்கப்பட்டது. இன்று அந்நிலைமை நீங்கி, கலப்புத்திருமணங் கள் மிகுவவாயின.

சமபந்தி போஜனம் முன்பு இல்லாதது. இன்று சிறப்பாக எங்கும் நடத்தப்படுகின்றது. இவைகளைக்கூட இன்றும் சிலர் உள்ளுக்குள்ளே ஏற்காமல் இருக்கலாம். ஆனால் வெளியே சொல்ல முடியுமோ? முடியாமைக்குக் காரணம் இந்திய நாட்டு அரசே இப்புதிய முறைகளை வலியுறுத்தி, நிலைபெறச் செய்கின்றது.

அத்தகைய நிலைமையில் தமிழ்நாட்டுக்கோயிலில் தமிழ் அருச்சனையை அனுமதிப்பது எந்தவகையில் நீதிக்குப் புறம்பாகும்? அவ்வாறு அநுமதிப்பது தார்மீக முறைக்கு ஏலாத ஒரு பாதகச் செயலா? அல்ல. ஆகையால் பண்டு தொட்டு அருளாளர்கள் காட்டிய நெறி நின்று, அருட்பாடல்களோதி ஆன்மீக வாழ்வு நடத்தி வரும் தமிழ்ச் சமுதாய மக்கள். ஆலய வழிபாட்டிலும் திருமுறைகள், திவ்வியபிரபந்தங்களை ஓதி வழிபாடு செய்து அருட்பேறு எய்தும் உரிமையைப் பெற மாநில மைய அரசுகளும், நீதித் துறையும் ஆவன செய்வதே அறநெறியாகும். இறையருள் கூட்டவேண்டுவோமாக.

கைகாள் கூப்பித் தொழீர்—கடி
மாமலர் தூவிநின்று
பைவாய் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித் தொழீர். —அப்பர்

---

அற்ப மனமுடையோர் பழிவாங்கும் பண்புடையவர்.

—சாக்ரட்டீஸ்

## கார்த்திகை மாத அடியவர் வழிபாடு

### கணம்புல்ல நாயனார் (23—11—99)

''துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை''

இருக்கு வேளூரைச் சார்ந்த கணம்புல்லர், சிவன் கோவிலில் விளக்கு எரிக்கும் சிவப் பணியைத் தாம் வறுமையுற்றபோதும் தவறாது திருப்புலீச்சரம் கோயிலில் செய்து சிவப்பேறு பெற்றார். குருபூசை நாள் கார்த்திகைத் திங்கள் கார்த்திகை நன்னாள்.

### மெய்ப்பொருள் நாயனார் (1—12—99)

''எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு''

சிவனடியாரின் திருவேடத்தையே மெய்ப் பொருள் என்று உறுதியான கொள்கையுடையவர், திருக்கோவலூர் சிற்றரசர் மெய்ப்பொருளார். சிவவேடத்தில் வந்தவர் தனக்கு இடையூறு விளைவித்த நேரத்திலும் அச்சிவ வேடத்திற்குரிய உயர்வைக் கொடுத்து சிவப்பேறு பெற்றவர் மெய்ப்பொருள் நாயனார். குருபூசைநாள் கார்த்திகைத் திங்கள் 'உத்திரம்' நன்னாள்.

### ஆனாய நாயனார் (2—12—99)

''பொருள் கருவி காலம் வினையிடனோடு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்''

திருமங்கலக்குடி ஆனாயரின் புல்லாங்குழலிசை பசுக் கூட்டங்களை ஒருங்கிணைத்தது. ஐந்தெழுத்து மந்திரத்தைப் புல்லாங்குழலில் இசைத்தபோது அவ்வொலி சிவபெருமான் திருச்செவிகளில் பட்டதின் பயனாய் சிவப்பேறு பெற்றவர் ஆனாய நாயனார். குருபூசை நாள் கார்த்திகைத்திங்கள் 'அஸ்த்தம்' நன்னாள்

---

கொடுமை என்பதன் மறுபெயர் பொறுப்பில்லாத அதிகாரம்.

—பிங்கனே

மூர்க்க நாயனார் (9—12-99)

''அறத்தினூஉங் காக்கமுமில்லை அதனை
மறத்தலினூங் கில்லை கேடு''

அடியார்களுக்கு அன்னமிடுதலை சிவத்தொண்டாகக் கொண்டு வாழ்ந்தவர் மூர்க்கர். திருவேற்காட்டில் தமது செல்வ வளம் குறைந்திட, கும்பகோணத்தை அடைந்து தாம் முன் கற்றிருந்த சூதாட்டத்தின் மூலம் பொருளீட்டி சிவத்தொண்டு செய்து சிவப்பேறு பெற்றவர் குருபூசை நாள் கார்த்திகைத் திங்கள் மூலம் நன்னாள்.

சிறப்புலி நாயனார் (10—12—99)

''மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து''

நாள்தோறும் வரும் சிவனடியார்களுக்கு முகமலர்ச்சியுடன் உள்ளன்புடன் விருந்தளித்து ஐந்தெழுத்து மந்திரத்தை யாவரின் நலத்திற்காக இடையறாது ஓதி சிவப்பேறு பெற்றவர் திருஆக்கூர் சிறப்புலி நாயனார். குருபூசைநாள் கார்த்திகைத் திங்கள் 'பூராடம்' நன்னாள்.

குருபூசை நாட்களில் திருக்கோயிலில் வழிபாடும் பன்னிரு திருமுறை மன்றத்தில் திருத்தொண்டர் புராண சிந்தனையும் நிகழும்.

—C.S. சொக்கலிங்கம்

---

சிவ விரதங்கள் - உமாமகேசுவரவிரதம்

கார்த்திகை மாதப் பௌர்ணமி நாளில் காலையில் எழுந்து நீராடிப் பொன் அல்லது வெள்ளியினால் சமைக்கப்பெற்ற உமாமகேசவரருடைய திருவுருவங்களை அர்ச்சித்து அறுசுவை அமுதைநிவேதித்து வணங்கி சிவனடியார்களுக்குத் தானம் ஈந்து அன்று ஒரு வேளை மட்டும் உணவாக அப்பம், பழம் முதலியவற்றை அடியவர்களுடன் உண்டு, சிறந்த சிவனடியார் ஒருவருக்கு பூஜித்த உலோகத் திரு உருவங்களை தானமாக அளிக்க வேண்டும். இவ்வாறு இந்த விரதத்தை ஒன்றுபட்ட மனத்துடன் விதிப்படி நோற்பவர், நல்ல அழகும், நீண்ட ஆயுளும், அறிவும், செல்வமும், பெற்று மறுமையில் பேரின்ப வீட்டை அடைவர்.

-உபதேசகாண்டம்

---

கட்டுப்பாடற்ற தனி அதிகாரம் அகங்காரத்தையும் அழிவையுமே நாடும்.

—ஆக்டன்பிரபு

திருச்சிற்றம்பலம்

**பன்னிரு திருமுறை மன்றம்**

தெற்காடிவீதி, ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில், மதுரை-1.

# நாற்பத்து ஆறாவது ஆண்டு நிறைவு விழா

*திருமுறை விழா — சான்றோர் போற்று விழா*

**1—12—1999 முதல் 12—12—1999 முடிய**

**நிகழிடம் : திருவள்ளுவர் கழகம், வடக்காடிவீதி.**

---

அன்புடையீர்! வணக்கம்.

எம்மன்றத்தின் நாற்பத்து ஆறாவது ஆண்டு நிறைவுவிழா- திருமுறை விழா - சானறோர் போற்றுவிழா ஆகியன அங்கயற்கண்ணி பங்கராம் சொக்கலிங்கப் பெருமான் திருவருளாலும் திருக்கயிலாய பரம்பரை சைவ ஆதீன குருமகா சந்நிதானங்கள் அருளாசிகளாலும் 1999 டிசம்பர் 1 முதல் டிசம்பர் 12ஆம் தேதி முடிய நிகழ்ச்சியில் குறித்த வண்ணம் நிகழவுள்ளன. தாங்கள் கலந்து கொண்டுசிறப்பிக்க வேண்டுகிறோம்.

இங்ஙனம்

மன்றப்புரவலர்கள் :

கா. சுப்பிரமணியம் — பெரி. பஞ்சநதம் செட்டியார்

கயிலை M. கண்ணப்பன் 'உழவாரம்' பெருமைதரு ஆசிரியர்

நீ.சீ சுந்தரராமன் (கூடல்சுந்தரன்) செயலர். — சி.சு. சொக்கலிங்கம் துணைச்செயலர்.

---

## முதல்நாள் விழா

1-12-99 புதன் மாலை 6-30 மணி

திருமுறைஓதல் : திரு. இரத்தினம் ஓதுவார்

விழாவைத் தொடக்கி வைத்துப் பாராட்டுபவர் : 'திருமுறைக்காவலர்' கயிலைத்திரு. M. கண்ணப்பன் செட்டியார், மன்றப்புரவலர்

பெறுபவர் : 'அருள்நெறிச் செல்வர்' ஐராவதநல்லூர் திரு. க. பழனிச்சாமிக் கோனார்

விரிவுரை : 'முதல் திருமுறை'

Dr. C.E. சூரியமூர்த்தி M.Sc; Ph.D எரிசக்தி துறைத் தலைவர்(ஓய்வு)

---

பொருளுதவும் புண்ணியர் : 'தொண்டர்சீர் பரவுவார்' திரு. M.L. சங்கர்-திருமதி சந்திரா அம்மாள் தம்பதியர் ★ டாக்டர் திரு சோ. இராஜாராம் பாரதி - சரஸ்வதி அம்மாள் தம்பதியர் நினைவாக திரு. S. சிவகுமார் – S. பார்வதி தம்பதியர்

## இரண்டாம் நாள் விழா

2-12-99 வியாழன் மாலை 6-30 மணி

திருமுறை ஓதல் : கயிலை மணி திரு A. சோமசுந்தர ஓதுவார்.

பாராட்டுபவர் : கயிலைமணி திருமதி மனோன்மணி கண்ணப்பன்

பெறுபவர் : பண்டித வித்வான், சிவநெறித் திலகம்
திருமதி N. சரஸ்வதி M.A., B.Ed.,

விரிவுரை : 'இரண்டாம் திருமுறை'
டாக்டர் திருமதி மீனாட்சி முருகரத்தினம் M.A., Ph.D.,
தமிழ்த்துறைத்தலைவர், அஞ்சல்வழிக் கல்வி, ம.கா. பல்கலைக்கழகம்

---

பொருளுதவும் புண்ணியர் : பண்ணிசைமணி திரு S S. மோகன்ராம் ஜானகி அம்மாள் தம்பதியர் ✦ திருமுறைத் தொண்டர்மாமணி சி. சங்கரன்பிள்ளை கமலாம்பாள் தம்பதியர் நினைவாக அவர்தம் மக்கள்.

---

## மூன்றாம் நாள் விழா

3-12-99 வெள்ளி மாலை 6-30 மணி

திருமுறை ஓதல் : திரு. கு. மணிகண்ட ஓதுவார்

பாராட்டுபவர் : சிவம்பெருக்குஞ்சீலர் திரு C.S. சொக்கலிங்கம்பிள்ளை

பெறுபவர் : அருள் நெறிச் செம்மல் திரு. S. ஆவுடையப்பபிள்ளை
திருநகர்

விரிவுரை : 'மூன்றாம் திருமுறை'
தமிழாகரர், பேராசிரியர் திரு தெ. முருகசாமி M.A.B.O.L.
முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி.

---

பொருளுதவும் புண்ணியர் : வாசுதேவ நல்லூர் திரு வி.ப. சுப்பையா பிள்ளை-இராஜம்மாள் தம்பதியர் நினைவாக அவர்தம் குடும்பத்தினர் ✦ திரு A. போஸ், தொழிலதிபர், திருநகர்.

---

## நான்காம் நாள் விழா

4-12-99 சனி மாலை 6-30 மணி

திருமுறை ஓதல் : திரு M. முத்துக்குமார்

பாராட்டுபவர் : சிவநெறிச்செல்வர் திரு K.S. பரமசிவம்பிள்ளை

பெறுபவர் : அருள்நெறிச் செம்மல் திரு A. போஸ், திருநகர்

விரிவுரை : 'நான்காம் திருமுறை'
வித்துவான் திரு மு. வைத்தியநாதன், திருச்சி.

---

பொருளுதவும் புண்ணியர்: திருமுறைத் திலகம் அமரர் N.S. சீனிவாச பிள்ளை நினைவாக திரு N.S. சாமிநாதன் S. சுசீலா தம்பதியர் ✦ திருப்புகழ்நம்பி திரு க. பழனிச்சாமிக் கோனார், ஐராவதநல்லூர்

## ஐந்தாம் நாள் விழா

5-12-99 ஞாயிறு காலை 7மணி

பொற்றாமரைக் குளக்கரையில் சிவபூஜகர்கள் ஆன்மார்த்த பூஜை செய்வார்கள்.

பூஜைக்குரிய பொருள்கள் வழங்குபவர் :

திருமுறைக் காவலர் திரு. S.S. சுப்பையாபிள்ளை குடும்பத்தினர்

உபசரிப்பு : திரு இ. கருப்பசாமி, ஜவுளி வாணிபம்
திரு C.L. சிவநாதன், சுமதி தம்பதியர்
திரு வெங்கடரத்தினம், திருநகர்.
திருநெல்வேலி திவான் பகதூர் அட்வகேட்
திரு.P. ஆவுடையப்பபிள்ளை B.A., B.L; A. கல்யாணி அம்மாள் ஆகியோர் நினைவாக திரு A. அரசப்பன் திருமதி A. சரஸ்வதி அம்மாள் தம்பதியர்.

---

## ஐந்தாம் நாள் விழா

5-12 99 ஞாயிறு காலை 9–30 மணி

திருமுறை ஓதல் : திருமுறைச் செல்வம் திருமதி மீ. ஜெயலட்சுமி, சீடர்கள் செல்விகள் S.K. அர்ச்சனா கஸ்தூரி S.K. வர்ஷிணி (எ) செந்தி லட்சுமி

தலைமை : சிவபூஜைச்செல்வர் திரு மு. இராமசாமி நாடார்

கருத்தரங்கம் : மூவர் தேவாரத்துள் சைவ சித்தாந்தம்

திருஞானசம்பந்தர் : சித்தாந்த கலாநிதி
டாக்டர் கோமதி சூரியமூர்த்தி M.A., Ph.D.,

திருநாவுக்கரசர் : சித்தாந்த வித்தகர் திரு தி. சு. கோவிந்தசாமிபிள்ளை (ஈசானசிவ தேசிகர்)

சுந்தரர் : டாக்டர் ந. மாணிக்கம் M.A., M.Lit., Ph,D., தமிழ்த்துறைத்தலைவர், தியாகராஜர் கல்லூரி, மதுரை.

---

பொருளுதவும் புண்ணியர் : திருப்பனந்தாள் கல்லூரி முன்னாள் முதல்வர் திரு K.M. வேங்கட்ராமையா நினைவாக பண்டிதவித்வான் சிவநெறித் திலகம் திருமதி N. சரஸ்வதி M.A., B.Ed.,

★ திரு சங்கரமூர்த்தியா பிள்ளை காவேரியம்மாள் தம்பதியர் நினைவாக திரு S. ஆவுடையப்பபிள்ளை, சிவகாமி தம்பதியர், திருநகர்.

## ஐந்தாம் நாள் விழா

5-12-99 ஞாயிறு மாலை 6-30 மணி

திருமுறை ஓதல் : திரு P. கந்தசாமி ஓதுவார்

பாராட்டுபவர் : திருநெறிய தமிழ்வேள் திரு. பெரி. பஞ்சநதம் செட்டியார், மன்றப்புரவலர்

பெறுபவர் : அருள் நெறிச் செம்மல் திரு M. சுந்தரம் B,E., (TNEB) ஒக்கூர்.

விரிவுரை : 'ஐந்தாம் திருமுறை'
டாக்டர் மு. சிவச்சந்திரன் எம்.ஏ.பி.எச்.டி.பி.எட்., தருமபுரம்.

---

பொருளுதவும் புண்ணியர் : சிவபூஜைச் செம்மல் புலவர் திரு சி. கலியாண சுந்தரம், இராஜேஸ்வரி M.A., B.E.d, தம்பதியர்
* திரு வ. கோபாலகிருஷ்ணன் செட்டியார் நினைவாக அருள் நெறிச் செல்வர் திரு G. தண்டாயுதபாணி செட்டியார், பர்வதவர்த்தனி அம்மாள் தம்பதியர்.

---

## ஆறாம் நாள் விழா

6–12-99 திங்கள் மாலை 6–30 மணி

திருமுறை ஓதல் : திரு T. அவிநாசிநாதன்

பாராட்டுபவர் : பண்ணிசைமணி திரு S.S. மோகன்ராம்

பெறுபவர் : அருள்நெறிச் செம்மல் திரு G. தியாகராஜன்

விரிவுரை : 'ஆறாம் திருமுறை' செந்தமிழ்த் திலகம்
டாக்டர் திருமதி. தி. சுந்தராம்பாள் M.A., Ph.D., விருதுநகர்

---

பொருளுதவும் புண்ணியர் : Dr. S.K. சொக்கலிங்கம் நினைவாக சிவநெறிச்செல்வர் திரு K.S. பரமசிவம்பிள்ளை * திரு P.M. கர்ப்பூர் நாடார் நினைவாக அவர்தம் மக்கள்.

---

## ஏழாம் நாள் விழா

7-12-99 செவ்வாய் மாலை 6-30 மணி

திருமுறை ஓதல் : திரு T.A. திருஞானசம்பந்த ஓதுவார்

பாராட்டுபவர் : சிவபூஜைச்செம்மல் திரு புலியூர் சுப்பிரமணியம்

பெறுபவர் : சிவபூஜைச்செம்மல் திரு C.L. சிவநாதன்

விரிவுரை : 'ஏழாம் திருமுறை'
தமிழாகரர் டாகடர் ச. சாம்பசிவனார் M.A., Ph.D., மதுரை.

பொருளுதவும் புண்ணியர் : திருச்சுழியல் சிவத்திரு D. சொக்கு பட்டர் (எ) சின்னத்தங்கம்பட்டர் நினைவாக திரு S.N. சுப்பிரமணிய பட்டர் M.Com., ★ தூத்துக்குடி கணிதப்பேராசிரியர் சித்தாந்தச் செல்வர் ஈசுவர விநாயகம் நினைவாக Dr. C.E. சூரியமூர்த்தி M.Sc., Ph.D.,

---

## எட்டாம் நாள் விழா

8-12-99 புதன் மாலை 6-30 மணி

திருமுறை ஓதல் : திரு K. சிவசங்கர ஓதுவார்

பாராட்டுபவர் : தொண்டர் சீர் பரவுவார் திரு M.L. சங்கர்

பெறுபவர் : அருள் நெறிச் செம்மல் திரு ஆ. செல்வமணி

விரிவுரை : 'எட்டாம் திருமுறை' - திருவாசகம்
தமிழாகரர் டாக்டர் சுப. அண்ணாமலை M.A; Ph.D;
'திருக்கோவையார்'
டாக்டர் திருமதி பொன்னம்மாள் சண்முகம் M.A.Ph.D.

---

பொருளுதவும் புண்ணியர் : திரு இரத்தினம் செட்டியார் நினைவாக திரு R. கோவிந்தன் ★ மொட்டைக்கோபுரம் மகாமுனீசுவரர் கோயில் பூசகர் திரு M.R. யாழ்கீத சுந்தரம்பிள்ளை நினைவாக திரு யாழ். சீதாராமன், பொன்மணி தம்பதியர்.

---

## ஒன்பதாம் நாள் விழா

9-12-99 வியாழன் மாலை 6-30 மணி

திருமுறை ஓதல் : மன்ற அன்பர்கள்

பாராட்டுபவர் : சிவபூஜைச் செம்மல் புலவர் திரு சு. முத்தையா M.A;

பெறுபவர் : அருள்நெறிச் செம்மல் S,N. நரசிம்மமூர்த்தி B.A;B.L;

விரிவுரை : 'ஒன்பதாம் திருமுறை'
டாக்டர் V. நாகராஜன் M.A; M.Phil; Ph.D;
முதல்வர், தேசியக் கல்லூரி, திருச்சி.

---

பொருளுதவும் புண்ணியர் : திருமதி சிவ. சரஸ்வதி அம்மாள் நினைவாக திரு N.V. சிவசண்முகம் செட்டியார் ★ திரு P.R. ராமாச்சாரி பாக்யலட்சுமி அம்மாள் தம்பதியர் நினைவாக திரு P.R. ஸ்ரீராம் சகோதரர்கள்.

## பத்தாம் நாள் விழா

10-12-99 வெள்ளி மாலை 6-30 மணி

திருமுறை ஓதல் : மன்ற மகளிர் அணி

பாராட்டுபவர் : திருநெறிய தமிழ்ச்செம்மல் திரு K.O.S. நாகராஜன்

பெறுபவர் : சிவநெறிச் செம்மல் திரு S.N. சுப்பிரமணியபட்டர் M.Com; B.L;

விரிவுரை : 'பத்தாம் திருமுறை'
சொல்லோவியர், பொற்கிழிக்கவிஞர், பேராசிரியர்
திரு. சொ. சொ. மீ. சுந்தரம் M.Com;

---

பொருளுதவும் புண்ணியர் : திருமதி இலட்சுமி அம்மாள் நினைவாக திருமுறைத் தொண்டர் சைபால் திரு M. இராமலிங்கம் பிள்ளை ★ தூத்துக்குடி திரு S. புலியூருடையார் பிள்ளை நினைவாக திரு புலியூர் சுப்பிரமணியம், திருநகர்.

---

## பதினோராம் நாள் விழா

11-12-99 சனி மாலை 6-30 மணி

திருமுறை ஓதல் : மன்ற அன்பர்கள்

பாராட்டுபவர் : அருள்நெறிச் செல்வர் திரு G. தண்டாயுதபாணி செட்டியார்

பெறுபவர் : சிவநெறிச் செம்மல் திரு P.V. குப்புசாமி

விரிவுரை : 'பதினோராம் திருமுறை'
தமிழாகரர் டாக்டர் பழ. முத்தப்பன் M.A; Ph.D;
கணேசர் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர், மேலைச்சிவபுரி

---

பொருளுதவும் புண்ணியர் : திரு C. சங்கர நாராயணன் M.A; நினைவாக திரு சி.சு. சொக்கலிங்கம் பிள்ளை, இராஜம்மாள் தம்பதியர் ★ சிவத்திரு S. நயினாக்கண்பட்டர், செல்லக்கண்ணி அம்மாள் தம்பதியர் நினைவாக திரு S.N. சுப்பிரமணியபட்டர் M.Com; கீதா தம்பதியர்.

## பன்னிரண்டாம் நாள் விழா

12-12-99 ஞாயிறு காலை 8-30 மணி

நாயன்மார் அறுபத்துமூவர் மற்றும் சந்தானாசாரியர்
மீனாட்சி சுந்தரேசுவரர் வழிபாடு

---

பொருளுதவும் புண்ணியர் :

✯ திரு S. ஆவுடையப்பபிள்ளை, திருநகர்

✯ ,, A. போஸ், திருநகர்

✯ தென்காசி திரு P.S இராமலிங்கம்பிள்ளை நினைவாக குமாரர் சென்னை காவல்துறை அதிகாரி திரு புலியூருடையான்

✯ திரு லெ, குருசாமி செட்டியார், சரவணா எலக்ட்ரிக்ல்ஸ்

✯ ,, V. சுப்பிரமணியன் செட்டியார், ஸ்ரீ வயிரவன் ரோடுவேஸ்,

✯ ,, V. திருஞானம், பாம்பன் மெர்க்கண்டைல்ஸ்.

---

## பன்னிரண்டாம் நாள் விழா

12-12-99 ஞாயிறு காலை 9-30 மணி

திருமுறை ஓதல் : சைவ சித்தாந்த சபை மகளிர் அணி

கருத்தரங்கம் : 'பதினோராம் திருமுறை'

தலைமை : சிவபூஜைச் செம்மல் திரு A. இராதாகிருஷ்ணன் செட்டியார்

நக்கீரர் அருளிய 'கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி'
திரு. யாழ். பாலசுந்தரம் B.A; B.L;
ஒய்வு பெற்ற தமிழ்நாடு அரசு துணைச் செயலர்

கபிலதேவ நாயனார் அருளிய
'மூத்த நாயனார் திருஇரட்டை மணிமாலை'

அலங்கை திரு எஸ்பி.எம். அன்பரசவேள் B.A;
செயலாளர், தமிழ்நாடு சிவனடியார் திருக்கூட்டம்

பரணதேவ நாயனார் அருளிய 'சிவபெருமான் திருஅந்தாதி'

திருநெறிய தமிழ்மணி வித்துவான் திரு தா. குருசாமிதேசிகர்,
செயலாளர், குருஞான சம்பந்தர் பணிமன்றம்.

---

பொருளுதவும் புண்ணியர் : புலவர் சு. முத்தையா M.A; B.Ed; மு. கோமதி அம்மாள் M.A; B.Ed; ★ திருமதி A. பழனியம்மாள் மற்றும் திரு A. மீனாட்சிசுந்தரம் ★ அவனியாபுரம் திரு K. வாலசுப்பிரமணியபிள்ளை நினைவாக திரு நீ.சீ. சுந்தரராமன், S. வசந்தா தம்பதியர்

## பன்னிரண்டாம் நாள் விழா

12-12-99 ஞாயிறு மாலை 6-30 மணி

திருமுறை ஓதல் : ஸ்ரீ சுவாமி தத்வானந்த ஆசிரம அன்பர்கள்
விரிவுரை : 'பன்னிரண்டாம் திருமுறை'
'அன்பின் முடிச்சு'
'செந்தமிழ்ச்செல்வர்' பேராசிரியர் டாக்டர் திருஇரா. செல்வக்கணபதி

---

பொருளுதவும் புண்ணியர் :

★ திரு ச. அருணாசல முதலியார், அ. பத்மாவதி அண்ணி தம்பதியர் நினைவாக திருமுறைத் தொண்டர்கள் திரு அ. சோமசுந்தரம், பாண்டிமாதேவி M.A., தம்பதியர்

★ திரு T.L. ராமச்சாரி, ராஜலட்சுமி அம்மாள் தம்பதியர் மற்றும் சோமலிங்கா S.B. நாகய்யர், துளசி அம்மாள் தம்பதியர் நினைவாக திரு S.N. நரசிம்மமூர்த்தி B.A., B.L; N. சரஸ்வதி அம்மாள் M.A; BEd., தம்பதியர்

★ திரு N. பிச்சையாபிள்ளை, P. கமலம் அம்மாள் தம்பதியர் நினைவாக திரு P. சக்திவடிவேல், திருமதி S. பத்மாவதி

★ திருமதி பிச்சம்மாள் நினைவாக திரு. சுப்பிரமணியபிள்ளை, திருமதிகஸ்தூரி சந்திரன் திரு. திருப்பதி வெங்கடாசலம்

---

பொருளுதவும் புண்ணியர் :

அழைப்பிதழ் : 'திருநெறிய தமிழ்ச் செம்மல்'
திரு K.O.S. நாகராஜன், ஒண்டிப்பிலிசர்பத் கம்பெனி

திருமுறை வானருக்குப் புத்தாடை :
திரு A.T. மாதவன் செட்டியார் நினைவாக திரு M. சுந்தரம் B.E.

புத்தாடைகள் :
அருள்நெறிச் செல்வர் திரு G. நாகராஜன் M.Sc., புவனேஸ்வரி ஸ்டோர்ஸ்
திரு G. தியாகராஜன், ரமணி பேப்பர் புராடெக்ட்ஸ்
திரு G. முருகபூபதி, வேல்முருகன் ஸ்டோர்ஸ்

மாலைகள் : திருமுறைச் செல்வர் திரு M. பாலசுப்பிரமணியம்
திருமதி விசாலாட்சி தம்பதியர்

அடியவர்க்கு அன்னம்பாலிப்பு : 5-12-99 அன்று
திரு ச.சு.அ.வ.ச. கந்தசாமிநாடார் திருமதி சுருளியம்மாள் திருமதி கஸ்தூரிபாய் நினைவாக அருள்நெறிச் செல்வர் திரு S.K. செந்தியப்பநாடார் அவர்கள்.

12-12-99 அன்று சிவதருமசீலர் திரு கா. சுப்பிரமணியம் அவர்கள் காத்தான் நாடார் கம்பெனி.

Printed Book.



Regd. N... 100 .../ 16 / 6 / AL / 85 / NT III dt : 26—9—85
U Z H A V... (Monthly) Regd No. TN / MA HO 16/98
License... ...ithout Prepayment Under Licence No. 11/99
Po... ...durai Bazaar Post Office on -11-99

உ

சிவமயம்

'என் கடன் பணிசெய்து கிடப்பதே'

## உழவாரம்

ஆசிரியர் : கூடல்சுந்தரன்
துணை ஆசிரியர் : சிவ. பார்வதி B.Com. B.A
மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக
வெளியிடுபவர்: C.S. சொக்கலிங்கம்
முகவரி : D. 89 பாரதியார் தெரு, டோர் நிர் 12, திருநகர், மதுரை – 6.
O ☎ 883086
அச்சு : அபிராமி அச்சகம், B-40 திருநகர், மதுரை–6. ☎ 883085

பெறுநர்

திரு N. திருநாவுக்கரசு
7/2 சர்ச் 4வது தெரு
T. T. நகர்,
அப்பர் அருளகம்,
காரைக்குடி
630 002

புரவலர் கட்டணம் ரூ 1000/-
ஆயுள் சந்தா - ரூ. 250/- ஆண்டுச்சந்தா - ரூ. 25/-